# நஜீர்
# இஸ்லாமியவீரர்
# ஜமாலுத்தீன்

புதுச்சேரி, [1946]

Bibliographic Record Target

*நஜீர்.*
*இஸ்லாமியவீரர் ஜமாலுத்தீன். -- புதுச்சேரி : E. M. ஹனீப், [1946]*
*[iv], 28 p. ; 13 cm.*
*Record no. 80825*

*Najīr.*
*Islāmiyavīrar Jamāluttīṉ. -- Putuccēri : E. M. Haṉīp, [1946]*
*[iv], 28 p. ; 13 cm.*
*Record no. 80825*

இஸ்லாமியவீரர்

# ஜமாலுத்தீன்




விற்பனை உரிமை:
**மின்னல் பதிப்பகம்**
புஸ்ஸி வீதி, புதுவை.

விலை] [அணா 5

சுதந்திரம் பிரஸ்.
புதுவை

# கருத்துரை

இஸ்லாமியப் பூங்காவில் மலர்ந்து மணந்தந்து மறைந்த மலர்கள் அனந்தம். அவற்றின் மணமும், குணமும், மதிப்பும் பிறவும் மானிட வாழ்வுக்குப் புத்துயிர் பயப்பன.

இஸ்லாமியத் தனிப்பெருஞ்சமுதாயம்,- இதுவரை எண்ணற்ற கர்மவீரர்களை இன்றெடுத்ததுண்டு. இவ்வீரப் பெரியார்கள் இகத்திற்கும், பரத்திற்கும் ஏற்றதாக நடாத்திக்காட்டிய வாழ்க்கை நம்போன்றூர்க்கு நல்லறிவுக் களஞ்சியம் என்றுல் மிகையாகாது.

ஜமாலுத்தீன் ஒரு கர்மவீரர், கலாஞானி, கோனின் குரு, குடிகளின் தோழர், ஆட்சியில் தந்திரி, புரட்சியில் தளபதி, முடிவாகச் சொன்னுல், "துறவிக்கு வேந்தன் துரும்பு" என ஒரு முறையல்ல பன்முறை பாருக்குணர்த்திய வீரத் துறவி. இன்னுர் இஸ்லாத்திற் காற்றிய சேவையின் சிறப்பு இச்சிறு வெளியீட்டில் சீரிய முறையில் சித்தரிக்கப்பட்டுளது.

மறைந்த பெரியோரின் சரிதை-புதைந்துள்ள பொக்கிஷம் போன்றது. அதனைத் தோண்டித் துருவிச் சுருக்கி விளக்கியுள்ளார் இந்நூலாசிரியர் அன்பர் ஜனுப் M. நஸீர். "சிற்றூறல் உண்ணீருமாகிவிடும்" என்ற மூதுரை இந்நூலின் அளவில் பிரதி பலிக்கின்றது.

ஆசிரியர் ஜனுப் "M. நஸீர்" அவர்களின் சேவையைப் பொது மக்களும் சிறப்பாக முஸ்லிம்களும் பயன்படுத்திக் கொள்ளவேண்டுமென்பதே எம்விழைவு. மேலும் பல புதிய எழுத்தோவியங்களைத்தீட்டி, தமிழகத்துக்கு வழங்கத்தக்க வன்மையை இறைவன் இந்நூலாசிரியருக்கு என்றும் நிரந்தரமாக்கவேண்டுமென பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம்

உத்தமபாளையம், 20-3-46 } K. H. ஷேக் அப்துல்காதிர் (இளம்பிறை)

# முன்னுரை

அந்நிய துருப்புக்கள் எகிப்திலிருந்து வெளியேறவேண்டும் "எகிப்து மாணவர்கள் கிளர்ச்சி" என்றெல்லாம் அண்மையில் செய்தித்தாள்கள் சாற்றின. இந்த கிளர்ச்சிக்குக் காரணகர்த்தா சையத் முஹம்மத் ஜமாலுத்தீன் என்பதை இச்சிறு நூல் ஒருவாறு தெளிவுறுத்தும்.

உலக முஸ்லிம்கள் ஒரு கொடியின்கீழ் ஒன்றுபடவேண்டும்; ஒரு கலீபாவின் கட்டளைக்குட்படவேண்டும்; இஸ்லாமிய நாடுகள் தமக்குள் பலம்பொருந்திய ஒரு கூட்டுஸ்தாபனம் நிறுவிக்கொள்ளவேண்டும்: இதையே தமது வாழ்க்கையின் குறிக்கோளாகக்கொண்டவர் ஜமாலுத்தீன் ஆப்கானி.

பெரியார் ஜமாலுத்தீன் இஸ்லாமியச் சமுகத்துக்கு ஆற்றிய தொண்டுகள் மிகப்பல; போனவிடமெல்லாம் புரட்சியைத் தோற்றுவிட்ட அந்த அறிஞரின் வாழ்க்கையைவிளக்க இச்சிறுநூல் இடந்தராது; எனினும் அவரைப்பற்றி அறிய அவாவுறுவோர்க்கு இது ஒரு சிறு துணையாக அமையும் எனக் கருதுகிறேன்.

இன்றும் சிலர் "வடநாட்டில் பாக்கிஸ்தான் அமைப்பதற்குத் தென்னாட்டு முஸ்லிம்கள் ஏன் ஒத்துழைக்கவேண்டும்?" என்றொரு அசட்டுக்கேள்வி கேட்கின்றனர்; அதற்கும் ஒருவாறு விடை பகரும் இச்சிறு வெளியீடு.

நான் மேற்கொண்ட இப்பணியில், எனக்கு உறுதுணையாகஇருந்த நண்பர் ஜனாப் மௌலவி [redacted]. யாகூப் (பாகவி) அவர்களுக்கும், இதனைப் பார்வையிட்டுக் கருத்துரை நல்கிய அன்பர் ஜனாப் K. H. ஷேக் அப்துல்காதிர் (இளம்பிறை) அவர்களுக்கும், என்னை இச்சிறுபணியில் தூண்டிய ஏனைய நண்பர்களுக்கும் என் உளமார்ந்த நன்றி.

எனக்குத் தமிழறிவுதந்த மதிப்புக்குரிய ஆசிரியர் புரட்சிக்கவிஞர் அவர்களுக்கு என்றென்றும் கடப்பாடுடையேன்.

புதுவை,
10-5 46.

நஜீர்

# ஜமாலுத்தீன்

## இஸ்லாமிய ஒற்றுமை

மேனாட்டினர், மனித இயற்கையின் எல்லா உண்மைகளும் தங்களுக்கேதான் தெரியும் என்று இருமாப்புறுகின்றனர். அங்குள்ள அறிவாளிகளில் உண்மையின் பக்கமே தன் பார்வையைச் செலுத்தாதவர்களும் இல்லாமலில்லை. அவர்கள், தமது அரசியல் திட்டங்களை வகுக்கும்போது, அறிந்தோ அறியாமலோ சில வார்த்தைகளைத் தவறாகப் பிரயோகிக்கின்றனர். ஆதலால் அந்த வார்த்தையின் உண்மைப்பொருளே மாறிவிடுகிறது.

"இஸ்லாமிய ஒற்றுமை" என்பது ஒரு சாதாரண எளிய பதம். இஸ்லாமியர்களுக்கிடையே சகோதரத்துவம், பரஸ்பர உதவி, இன்பதுன்பங்களில் ஒருவர் மற்றவர்களுடன் கலந்து கொள்ளுதல்; சமுதாயச் சீரமைப்பின் இந்த அடிப்படைக்கொள்கைகளே அதன் உண்மைப் பொருள். இதனை எந்த அறிஞனும் மறுத்துரைக்க இயலாது. ஆனால், சூழ்ச்சியே தங்கள் பிறவிக்குணமெனக்கொண்ட, மேனாட்டு அரசியல்வாதிகளில் சிலர், அதற்கு, 'அகிலாண்ட இஸ்லாம்' (பான் இஸ்லாமிஸம்) என்று பெயர் கொடுத்தனர். இதைச் செவியுற்றதுமே ஆவேசமும், தன்னலமும், மூர்க்கமும் கொள்ளத்தக்க ஒரு சொல்லது.

சைனுவிலும், ஆப்ரிக்காவிலும் நடந்த மஞ்சட் புரட்சி, கருப்புப் புரட்சிகளைப்போல், இது ஒரு அகில உலக இஸ்லாமியப் புரட்சி என்று திரித்துக் கூறிவிட்டனர். தன்னாட்சியுள்ள எல்லா இஸ்லாமிய நாடுகளின் சுதந்திரத்தையும் சிதைத்து அவைகளை ஒழித்துவிட்டு, உலக முழுமைக்கும் ஏக கிருஸ்துவ ஆட்சியை நிறுவவேண்டுமென்னும் சூழ்ச்சியும் சுயநலமும் கொண்ட சிலரால் திரித்துவிடப்பட்ட கட்டுக்கதையே அந்த "இஸ்லாமியப் புரட்சி" என்னும் கூட்டார்த்தம். உலகத்தின் எந்த பாகத்திலர்வது பான் இஸ்லாமிஸம் இருக்குமானால், அது இஸ்லாமிய ஒற்றுமையைப் பலப்படுத்தவும், இஸ்லாமிய நாடுகளின் சுதந்திரத்தைப் பாதுகாக்கவுமேதான் இருக்கும் என்பதை அந்த குதர்க்கவாதிகள் நன்ருக அறிந்திருப்பர்.

இஸ்லாமியர்களுக்குப் பிறநாடுகளின்மேல் கண்ணோட்டமோ, பிறஆதிக்கங்களில் ஆசையோ கிடையாதென்பதையும் அவர்கள் அறிந்தே இருப்பார்கள். தங்கள் உடலினினும் உண்மை மனித ஆத்மா பிறரால் பாதிக்கப்படாமல் பாதுகாத்ததற்கு அவர்கள் (முஸ்லிம்கள்) சில சமயங்களில் உபயோகிக்கும் ஒரு சில உணர்ச்சி வேகத்திற்கே அந்த (பான் இஸ்லாமிஸம்) பெயர் என்ருல் அது இருப்பதாகவே நாம் ஒப்புக்கொள்ளுகிருேம்.

ஐரோப்பிய வல்லரசுகளின் சுரண்டல் கொள்கைகளிலிருந்தும், அதிகார வெறியிலிருந்தும், பிறநாட்டு ஆதிக்க ஆசையிலிருந்தும், அதற்காக அவர்கள் செய்யும் சூழ்ச்சிகளி



லிருந்தும் தம்மைக்காத்துக்கொள்வதற்கு ஆப்கானிஸ்தான், இரான், துருக்கி, மொராக்கோ, முதலிய இஸ்லாமிய நாடுகள் தமக்குள் ஒரு கூட்டுஸ்தாபனம் வேண்டுமென்று அதற்கென பெருமுயற்சிகள் எடுத்துக்கொள்ளுவதே இதற்குப்போதிய சான்று. இதை விடுத்து, மேனாட்டார்கள், இஸ்லாமிய ஒற்றுமை என்னும் ஒரு சாதாரண சொல்லுக்கு இஸ்லாமிய இயக்கமென்றும், அகில உலக இஸ்லாமிய புரட்சியென்றும் துர்ப்பிரச்சாரம் செய்வது, தங்களின் அதிகாரவேட்டை, சுரண்டல் கொள்கை, திருட்டுத்தனமான ஆக்கிரமிப்பு முதலிய சூழ்ச்சிகளை, கீழ்நாட்டார் கண்ணில் படாமல் மறைப்பதற்காகவே கட்டிவிடப்படும் போலிப்பிரச்சாரங்கள்.

தற்கால இஸ்லாமிய உலகின் வீழ்ச்சிக்கு, இஸ்லாமிய ஒற்றுமையின்மையே முதற்காரணம். இஸ்லாமிய ஒற்றுமை என்பது இன்றுநேற்று ஏற்பட்ட இயக்கமல்ல. முஹாஜிர்களுக்கும், அன்சாரிகளுக்குமிடையே ஏற்பட்ட தெய்வீக ஒப்பந்தமே இஸ்லாமிய ஒற்றுமை. அது, அன்றுதொட்டு இன்றுவரை ஒவ்வொரு முஸ்லிம் உள்ளத்திலும் ஒளிர்கின்றது. அதுவே இஸ்லாமியக் குறிக்கோளாகவும் மிளிர்கின்றது. இதனாலேயே உலகத்திலுள்ள எல்லா முஸ்லிம்களும் ஒன்ருகப் பிணைக்கப்பட்டிருக்கின்றனர்.

உலகத்தில் அவ்வப்போது தோன்றிய தீர்க்கதரிசிகளும் இஸ்லாமிய சமூகத்தின் கீழ்த்திசையைக் கண்டு உள்ளம் உருகி முஸ்லிம்களின் உள்ளங்களில் ஒருவித சக்தியை ஊதி அவர்களைச் சீர்திருத்தி அவர்களுக்குள் சகோதரத்துவத்தை

பலப்படுத்திச் சென்றனர். அவர்களில் ஜமாலுத்தீன் ஒருவர்.

சீர்கெட்டுச் சிதைந்துச் சின்னபின்னப்பட்டுத் தன் உயர்வை யிழந்து, அதள பாதாளத்தில் அமிழ்ந்து கிடந்த முஸ்லிம் சமூகத்தை மீண்டும் உருப்படுத்த 19ம் நூற்றுண்டின் மத்தியில், சையத் முஹமத் ஜமாலுத்தீன் தோன்றினர். இந்த அதிசய மனிதரைக்கண்டு ஆப்கானிஸ்தான், இரான், எகிப்து, துருக்கி முதலிய இஸ்லாமிய நாடுகள் களிப்புக் கடலில் மூழ்கின. அவருக்கு இரான்நாடு மிகவும் கடமைபட்டுவிட்டது; 1908ல் அந்த நாட்டில் நடந்த புரட்சியே அதற்குக் காரணம்! அந்த நாட்டு மக்கள் உள்ளத்தில் விடுதலை வேட்கையை எழுப்பிப், புரட்சித்தீயை நாடு முழுமைக்கும் பரவச்செய்த பெருமை சையத் சாஹிபையே சாரும். அவரே அதற்குக் காரணகர்த்தர். அப்போது ரஷ்யா அந்த தீயை இலகுவில் அணைத்துவிட முயன்றது. தன் தளைகளைத் தன் கரங்களாலேயே தகர்த்தெரிய ஆவேசங்கொண்டெழுந்த இரானை பிரிட்டிஷ், ரஷ்யப் போர்வையில் புகுந்து புரட்சி தலைகாட்டாமல் தடுக்கத் தீவிர முயற்சி எடுத்துக்கொண்டது, ஜெர்மனி, தன் செல்வாக்கைப் பொதுமக்களிடம் பரப்ப சூழ்ச்சிகள் செய்தது. எது நடந்தால்தான் என்ன? மூவாயிரமாண்டுகள் கிரேக்கர்களாலும், அரேபியர்களாலும், மொகலாயர்களாலும், தார்தாரிகளாலும், துருக்கியர்களாலும், ஆப்கானியர்களாலும், மாறிமாறிப் பறிக்கப்பட்டுப் பிறகு அன்னியர்களின் தளைகளினின்றும் விடுவித்துப் புத்துயிர்பெற்று தலைநிமிர்ந்து நிற்கும் அந்நாடா அந்நியர்களால் அழிந்துபடும்?



மானியும் ஜர்தஷ்தும், ருஸ்துமும் அப்ராசியாபும், அப்துல்லா இப்ன்மைமூனும், ஹஸன் இப்ன் சுபாஹும், பார்அபீயும், பூஅலி சீனவும், பிர்தௌஸியும் நிஜாமியும், சஅதியும் ஹாபிஜும் பிறந்து, மன்பதைக்கு மதம், அறிவு, இலக்கியம், விஞ்ஞானம், நாகரிகம் முதலியவைகளைக் கொடுத்து என்றுங் குன்றாப் பெரும்புகழெய்திய நாடா பிறர் கையில் சிக்கிவிடும்? அதை அழித்துவிடத்தான் முடியுமா? வேறெந்த நாடுகளிலும் காணமுடியாத அத்தனை பெரிய உயர்ந்த கொள்கைகளையும், எண்ணங்களையும், அறிவின் வளர்ச்சியையும், உணர்ச்சியின் உத்வேகங்களையும், மாபெரும் புரட்சிகளையும் கண்ட அந்த நாட்டையா அந்நியர் அடக்கமுடியும்? ஷியாக்கள், இஸ்மாயிலிகள், ஹராபிகள் பஹாயிகள் போன்ற அறிவுச் சிகரங்களின் இடையரு உழைப்பால் நிறுவப்பட்ட, அரும்பெருஞ் செல்வங்களைக் கொண்ட அந்த மண்ணையா பிறர்ஆள விட்டுவிடுவர்?

## இஸ்லாமிய நாகரிகத்தில் அந்நியர் அன்பு

பேராசிரியர் ப்ரௌன் இரானைப்பற்றிய அநேக நூற்கள் வெளியிட்டுள்ளார். பெர்ஷியாவின் இலக்கிய சரித்திரம் என்னும் நூலைப்படித்தவர்கள், அவருக்கு அந்த அபிமானம் எப்படி—ஏன் வந்தது என்பதை அறிந்து கொள்வர். அவர் 30 ஆண்டுகள் பார்சி இலக்கியங்களை ஆராய்ந்து அனுபவித்தார். இஸ்லாமிய நாகரிகத்தின் உண்மை அடிப்படையைக் கண்கூடாகக் காண அடிக்கடி சந்தர்ப்பங்கள் கிட்டின. அதனல்தான் அவருக்கு அவ்வளவு அன்பு உண்டாகியது. "இரான் புரட்சி" என்னும் நூலை எழுதி, அவர் தமது நன்றியைத் தெரிவித்துக்கொண்டார்,

## ஜமாலுத்தீன்

சையத் முஹம்மத் ஜமாலுத்தீன், காபூல் நகரத்திற் கருகிலுள்ள அஸ்அத் ஆபாத்தில், ஹிஜ்ரி 1254ல், அதாவது கி. பி. 1839ல் பிறந்தார். அவர்தம் தந்தையாரின் பெயர் சையத் சப்தர்; பிரபல முஹத்திஸான சையத் அலி திருமதியின் ஹுசைனி சையத் வம்சத்தைச் சேர்ந்தவர்.

ஜமாலுத்தீன் சிறு குழந்தையாயிருக்கும்போதே, அவர்தம் தந்தையார் காபூலில் குடிசென்றார். சிறு வயதிலேயே எதையும் எளிதில் விளங்கிக்கொள்ளும் திறனும், கூறிய அறிவும் பெற்றிருந்த தன் மகன், பிற்காலத்தில் உலக உத்தமர்களில் ஒருவனாகத் திகழ்வான் என்றுஎண்ணி அவர் இரும்பூதெய்தியதில் ஆச்சரியமொன்றுமில்லை. இளவயதின் எட்டாவதாண்டில், தாமே அவனுக்கு வேண்டிய கல்வியறிவு கொடுக்கத் தலைப்பட்டார். 18 வயதிலேயே ஜமாலுத்தீன் எல்லா இஸ்லாமிய கலைகளையும் கற்றுத் தெளிந்தார்.

## ஹஜ்யாத்திரை

மேனாட்டுக் கல்விக்காக தமது 18ம் பிராயத்தில் இந்தியாவுக்கு வந்தார். இங்கே ஓராண்டுக்கதிகம் தங்கியிருந்து தமது குறிக்கோளில் வெற்றியடைந்தார். பிறகு ஹஜ்ஜுக்காக மக்காவுக்குப் புறப்பட்டார். போகும் வழியில் அநேக முக்கிய இடங்களைப் பார்வையிட்டுக்கொண்டே கி. பி. 1857ல் திருமக்காவை அடைந்தார், அங்கே ஹஜ் முடித்துக்கொண்டு தோஸ்த் முஹம்மத்கான் மன்னனுடன் நாடு திரும்பினார்.



2354

## ஆப்கான் புரட்சி — பிரதம மந்திரி

மன்னர் தோஸ்த்முஹம்மத் 1864லில் உயிர் நீத்தார் அவருக்குப் பிறகு ஷேர் அலிகான் மன்னரானார். இந்த புதிய மன்னர் தனது ஆலோசனையாளரின் துர்ப்போதனையால் தனது சகோதரர்களான முஹம்மத் அஃஜம், முஹம்மத் அஸ்லம், முஹம்மத் அமீன் ஆகிய மூவரையும் சிறைப்படுத்த முயற்சித்தான். இந்த செய்தியை, முன்னமேயே அறிந்துகொண்டு அம்மூவரும் தத்தம் மாகாணங்களுக்குத் தப்பி ஓடிவிட்டனர். அதனால் உள்நாட்டு குழப்பம் ஏற்பட்டது. அதன் விளைவாக முஹம்மத் அஃஜமும், அவன் சகோதரனின் குமாரன் அப்துல் ரஹ்மான்கானும் அரசாங்கத்தைக் கைப்பற்றிவிட்டனர். கஜ்னியில் சிறைபட்டுக்கிடந்த முஹமத் அப்ஜலை ரஹ்மான்கான் விடுதலை செய்து, சிம்மாதனத்திலமர்த்திவிட்டான். ஆனால் முஹம்மத் அப்ஜல் ஓராண்டுக்குப் பிறகு இறந்துவிட்டான். அவனுக்குப்பதிலாக முஹம்மத் அஃஜம் முடிசூடிக்கொண்டு, சையத் முஹம்மத் ஜமாலுத்தீனைத் தனது பிரதம மந்திரியாக அமர்த்திக் கொண்டான்.

முஹம்மத் அஃஜம் தனது மந்திரியின் ஆலோசனைப் படி நடந்திருந்தால், நாடு முழுதும் அவன் கையில் கிட்டியிருக்கும். ஆனால் அவன் தன் சுற்றத்தார்களைப் பொறுமையோடும், நம்புதலின்மையாலும் நடத்தியதாலும், உலகியல் சிறிதும் அறியாத தனது சிறிய மகன் சொற்கேட்டு, யாருக்கும், எந்தவித பொறுப்பும் அதிகாரமும் தராமலிருந்தாலும், தானே சர்வாதிகார லீலையில் இறங்கிவிட்டான்.

மன்னன் ஷேர் அலிகான் இதுவரை கந்தஹாரை ஆண்டுவந்தான். முஹம்மத் அஃஜமின் ஒரு மகன், எப்படியாவது ஒரு சமர்த்தியம் செய்து தன் தந்தையின் அன்பு பெற வேண்டுமென்ற நோக்கத்துடன் தன் சிற்றப்பனையே எதிர்த்துப் போரிட்டான்; முயற்சி வீணயிற்று. இருநூறு போர்வீரர்களுடன் போர் தந்திரமே சிறிது மறியாது போர் செய்த அவனை, ஷேர் அலிகானின் சேனதிபதி எளிதில் வென்று சிறைப்படுத்தி விட்டான். இந்த வெற்றியால் தைரியமும், பலமும் அடைந்த ஷேர் அலிகான் ஆங்கிலேயர்களிடம் அதிக பணம் கொடுத்து, தனது அண்ணன் முஹம்மத் அஃஜமையும், ரஹ்மான்கானையும் எதிர்த்துப் போரிட்டதால் அந்த இருவரும் சரணடைந்தனர். சரணடைந்த முஹம்மத் அஃஜம் நைஷாபூரில் சில திங்கள் தங்கியிருந்துகாலமானன். அப்துல் ரஹ்மான்கான் புகாராவுக்குச் சென்றுவிட்டான்.

## ஈரான்வழியாகச் செல்லத் தடை

இந்த எதிர்பாராத புரட்சிக்குப் பிறகும், ஜமாலுத்தீன் காபூலிலேயே தங்கியிருந்தார். சையத் பரம்பரையைச் சேர்ந்தவராதலால் மக்கள் அவரைப் பெரிதும் நம்பினர்கள். மன்னன் ஷேர் அலிகானும் அவரைத் தக்க மரியாதையோடு நடத்தினன். சிலகாலத்திற்குப்பிறகு, எப்படியாவது ஆப்கானிஸ்தானைவிட்டு வெளியேறிவிடவேண்டுமென்ற எண்ணத்தால், ஹஜ்யாத்திரைக்குப் போவதாக மன்னனிடம் உத்திரவு கோரினர். இவர் ஆப்கானிஸ்தானைவிட்டுச் சென்றல், தன் பங்காளிகளுடன் கூடி என்ன குழப்பம் உண்டு



பண்ணி விடுவாரோ என்ற அச்சம் அரசனை உருத்தியது. நீண்ட ஆலோசனைக்குப்பிறகு ஒருவாறு மனந்தேறிய மன்னன், அவரை, இரான்வழியாகச் செல்லக் கூடாது எனத் தடைசெய்தான் சையத் சாஹிப்இந்தியா மார்க்கமாக மக்கா யாத்திரை செல்லப்புறப்பட்டார்.

## இந்தியாவில் வரவேற்பு

அவர் இந்தியாவுக்கு வந்தபோது, இந்திய சர்க்கார் அவருக்கு ஒரு பெரிய வரவேற்பளித்தது; இந்தியத் தலைவர்கள் அவரைச் சந்திக்க இயலாதவாறும் மெல்ல தனது திறமையைக் காட்டியது. ஒரு மாதத்திற்குப் பிறகு, தக்க மரியாதைகளுடன், ஜமாலுத்தீன், கப்பலேற்றி சூயீசுக்கு அனுப்பிவிடப்பட்டார். பிறகு, சூயீசிலிருந்து கெய்ரோவுக்குச் சென்று 40 நாள் தங்கியிருந்தார். இந்த இடைவேளையில் அடிக்கடி அஸ்ஹர் பல்கலைக் கழகத்துக்குச் சென்று, அங்குள்ள பேராசிரியர்களுடனும், மாணவர்களுடனும் கல்விப் பிரச்னையைப்பற்றி நீண்ட விவாதங்கள் நடத்திவந்தார். தமது இருப்பிடத்தில் அநேக முக்கியஸ்தர்களுக்கும் பேட்டியளித்துவந்தார்.

## தானிஷ்மஹாலில் அங்கத்தினர்

ஜமாலுத்தீன், கெய்ரோவிலிருந்து நேரே மக்காவுக்குச் செல்லவிருந்த பிரயாணத் திட்டத்தை மாற்றியமைத்துக் கொண்டு கான்ஸ்டாண்டிநோபிளுக்குச் சென்றார். துருக்கி மன்னரும், இதர முக்கியஸ்தர்களும் அவருக்கு மரியாதை

செலுத்தி வரவேற்றனர். 6 மாதம் அங்கே தங்கியிருந்த பிறகு அஞ்சுமனே தானிஷ் மஹாலில் பிராஞ்சு அக்கா) டெமியைப்போன்றது) அஞ்சுமனே தானிஷ் மஹாலில் அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார். 1870 டிசம்பர் மாதத்தில், உஸ்மானி யூனிவெர்ஸிட்டியின் அத்யக்ஷகர், மாணவர்களுக்கு ஒரு சொற்பொழிவு நிகழ்த்த வேண்டுமென ஜமாலுத்தீனை வேண்டிக்கொண்டார். சையத் சாஹிப் அந்த வேண்டுகோளுக்கு இணங்கினர்.

## துருக்கியில் சொற்பொழிவு

சையத் சாஹிப் தமது பிரசங்கத்தைத் துருக்கி மொழியில் எழுதி, கல்வி மந்திரி முதலிய அறிஞர்களிடம் காட்டினர். எல்லோரும் அதை ஒருமுகமாக பாராட்டினர்கள். ஆனால் சையத் சாஹிபின் செல்வாக்கைக்கண்டு மதகுரு பஹமி என்பவர் மிகவும் பொருமைப்பட்டார். அவர் செல்வாக்கைக் குறைக்கச் சமயம் பார்த்திருந்தார். அரசர் அவையிலே. அறிஞர்கள் குழாமில், ஜாமாலுத்தீன் தமது சொற்பெருக்கை நிகழ்த்தினர். "ஆன்மாயில்லாத உயிர் ஜீவித்திருக்கமுடியாது. மனித உடலிலுள்ள ஆன்மா, நபித்துவம், விஞ்ஞானம் ஆகிய இவ்விரண்டையும் ஏற்றுக் கொள்ளக்கூடிய சக்தி படைத்திருக்கிறது. ஆயினும் நபித்துவம், இறைவனல் தனக்குரிய அடியார்களுக்கு அளிக்கப்படும் பரிசு. அதை மனிதன் தன் சொந்த அறிவாலோ, முயற்சியாலோ அடைய இயலாது. விஞ்ஞானத்தை மனிதன் தன் சொந்த முயற்சியாலும் அறிவினலும் அடையக்கூடும். தீர்க்கதரிசி தவறு இழைக்கவோ, பாபம்புரியவோ இயலாது.



விஞ்ஞானியோவெனில் தவறு செய்யலாம் – தீங்கு பல இழைக்கலாம்; ஆதலால் விஞ்ஞானியின் முடிவைத் தீர்க்கதரிசனமாகக்கொள்ள முடியாது." என்று அதில் குறிப்பிட்டிருந்தார். ஷெய்குல் இஸ்லாம் எதிர்பார்த்தபடியே சந்தர்ப்பம் கிட்டியது. நபித்துவத்தைத் தொழிலாகவும், தீர்க்கதரிசியைத் தொழிலாளியாகவும் கூறியதாக ஜமாலுத்தீனை மடக்கினர். ஜமாலுத்தீன் அந்த வாதத்தை நிராகரித்துவிட்டார். இருவரும் தத்தம் விவாதங்களையே சரியெனக் கருதினர். இருவருக்குமிடையே சச்சரவு வலுத்தது. அமைதியை உத்தேசித்துத் துருக்கி சர்க்கார், ஜமாலுத்தீனைச் சிறிது காலம் கான்ஸ்டாண்டிநோபிளைவிட்டு வெளியே போயிருக்குமாறு ஜாடை காட்டியது. இதையறிந்த சையத் சாஹிப் மீண்டும் 22—3—1871ல் எகிப்துக்குச் சென்றுவிட்டார்.

## எகிப்து மாணவர்களுக்கு எழுச்சி தந்தார்

எகிப்தில் சிறிது நாள் தங்கியிருந்து தாயகம் திரும்பிவிட வேண்டுமென்பது சையத் சாஹிபின் எண்ணம். ஆனால் அது இடேறவில்லை. அவரது பெரும்புகழையும், புலமையையும் ஆராய்ச்சித் திறனையும் அறிந்த ரியாஜ் மன்னர், அவரை வந்து சந்தித்தார். எகிப்து அரசாங்கத்திலிருந்து, பகாரச்சம்பளமாக மாதா மாதம் ஆயிரம் பியாஸ்தர் அவருக்குக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தார். எண்டிசையிலிருந்தும், அறிஞர்களும், பண்டிதர்களும், மாணவர்களும் வந்து அவரைச்சந்தித்து அநேக விஷயங்களைப்பற்றி விவாதித்து, சந்தேகந் தெளிந்து சென்றுர்கள். இவரது பெயரும் புகழும் நாளுக்கு நாள்

வளர்ந்துகொண்டே வந்தது. மிகச்சொற்ப எழுத்தாளர்களே எகிப்தில் இருப்பதைக்கண்டு மிகவும் வருந்தினர். ஆதலால் தன்னிடம்வந்த எல்லா மாணவர்களுக்கும் இலக்கியம், விஞ்ஞானம், பாரமார்த்திகம், அரசியல் ஆகிய எல்லாத் துறைகளையும் பயிற்றுவித்தார்; வெற்றியுங்கண்டார். சிறந்த எழுத்துவன்மை படைத்த இளைஞர்கள் எகிப்தில் பல்கினர்.

## எகிப்திலிருந்து வெளியேற்றம்

கான்ஸ்டாண்டிநோபிளைப் போலவே, இங்கும் இவரைக் கண்டு சிலர் பொருமைப்படாமலில்லை. பழைமையே விரும்பும் பண்டிதர்கள், இவர் விஞ்ஞானத்தைப் பறத்தவே பாடுபடுகிறார் என்று குறைகூற ஆரம்பித்தார்கள். அங்கிருந்த ஆங்கில ஸ்தானிகர், சையித் சாஹிபின் அரசியல் போக்கைக்கண்டு இங்கேயும்புரட்சியை உண்டுபண்ணி விடுவாரோ என்ற அச்சத்தால், தௌபீக் பாக்ஷாவிடம் கூறி, இவரை வெளியேறிவிட உத்தரவு போட்டுவிட்டார். எனவே, தமது அத்யந்த மாணவர் அபூதராப் என்பவருடன், 1879 செப்டம்பர் மாதத்தில் எகிப்தைவிட்டுப் புறப்பட்டு நேரே இந்தியா வந்தடைந்தார். இங்கே ஹைதராபாதில், மதகுரு வேலையை மேற்கொண்டார். சிந்நாட்களில், பார்ஸி மொழியில், முலாஹிதா (இஸ்லாத்தைவிட்டு விலகியவர்கள்) க்களுக்கு மறுப்பாக ஒரு நூல் எழுதி வெளியிட்டார். 1881ல் வெளியான அந்நூலுக்கு பேருத்திலிருந்து 1886ல் ஒரு அராபி மொழிபெயர்ப்பு வெளியிடப்பட்டது.



## இந்தியாவில் கைது

2351

1882ல் எகிப்து இளைஞர்களால் நடத்தப்பட்ட கிளர்ச்சிக்கு சையத் சாஹிபுடைய யோசனையும், ஆதரவுமே முக்கிய காரணங்கள். ஏனெனில், தௌபீக் மன்னனின் வீண் செலவுகளையும், எல்லைமீறிய ஆடம்பரங்களையும், அந்நியர்களின் தலையீட்டுக்குக் கண்மூடித்தனமான ஆதரவையும் தடுப்பதற்காகவே அந்த கிளர்ச்சி ஏற்பட்டது. அராபி பாஷாவின் வெளியேற்றமும், அலக்ஸாண்ட்ரியாவின் துப்பாக்கிப்பிரயோகமும், தில்லுல்கபீர்யுத்தமும், பிரிட்டிஷாருக்கு உதவியா யிருந்தன. யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்னமேயே, இந்தியகவர்ன்மெண்டார், ஜமாலுத்தீனைவஞ்சகமாக ஹைதராபாத்திலிருந்து கல்கத்தாவுக்கு அழைத்து, அங்கேயே முடக்கிப்போட்டுவிட்டனர். எகிப்துக் கிளர்ச்சி தோல்வியுற்ற பிறகுதான், ஜமாலுத்தீன், இந்தியாவைவிட்டு வெளியே செல்ல அனுமதிக்கப்பட்டார். இந்தியாவிலிருந்து நேரே லண்டனுக்கும், பிறகு பாரிசுக்கும் சென்று அங்கே மூன்று ஆண்டுகள் தங்கினர்.

## அல்உர்வதுல் உஸ்கா

1871ல் கெய்ரோவில் சந்தித்து நட்புபூண்ட அவரது மாணவரும், அத்யந்த நண்பருமான முகம்மது அப்தாவை அங்கே சந்தித்தார். 1882ல் எகிப்து புரட்சியில் உடன்பட்டிருந்ததாக, அறிஞர் அப்தாவும் நாடுகடத்தப்பட்டு பாரிசில் தங்கி இருந்தார். பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமா?

இருவரும்கூடி, பாரிசில் ஓர் அரபி பத்திரிகை ஆரம்பித்தார்கள். அல்உர்வதுல் உஸ்கா என்னும் பெயர் கொண்ட அந்த சஞ்சிகை, முழுதும் அரசியல்பிரச்னைகளைக் கொண்டே வெளிவந்தது. குறிப்பாக இந்திய அரசாங்கத்தின் ஊழல்களைக் காரசாரமாகக் கண்டித்தது. இந்தியாவைப் பற்றி அறிந்துகொள்ள அவாகொண்ட மக்கள், அந்த பத்திரிகைக்கு நிரம்ப ஆதரவுதந்தனர். நாடோறும் வளர்ச்சியடைந்துவந்த அந்த பத்திரிகையின் பிரச்சாரத்தைக்கண்டு பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் மிகவும் அஞ்சினார்கள். ஆதலால் அல்உர்வதுல் உஸ்கா இந்தியாவில் வரக்கூடாதென்று தடைபிறப்பித்து சிறிது சிறிதாக தமது அந்தரங்க சூழ்ச்சியால் அந்த பத்திரிகையையே நிறுத்திவிட்டனர்.

## ஆங்கிலேயர்களின் மனநடுக்கம்

காலப்பரியந்தத்தில் சைய்யத் சாஹிப் பிரஞ்சு மொழியையும் ஓரளவுகற்றுக்கொண்டு எல்லாபிரபலபத்திரிகைகளிலும்கட்டுரைகள் எழுதிவந்தார். பிரஞ்சுஅறிஞர்ரைனுலுடன் இஸ்லாத்தைப்பற்றியும், விஞ்ஞானத்தைப்பற்றியும் நீண்ட விவாதங்கள் நடத்தினர். குறிப்பாக ரஷ்யா, எகிப்து, துர்க்கி முதலிய நாடுகளின் அரசியல் நிலைமையைப்பற்றி, பிரபல ஆங்கிலச் செய்தித் தாள்களில் வெளியிட்டார். இதனைலெல்லாம், அக்காலத்திய ஆங்கில அரசியல் வாதிகளும், ராஜதந்திர நிபுணர்களும் இவரைக்கண்டு அஞ்சிக்கொண்டேயிருக்க நேர்ந்தது. 1885ல் லண்டனுக்குச் சென்று லார்ட் ருண்டால்ப், சர்ச்சில், சர். ட்ருமண்டு வுல்ப், லார்ட் சாலிஸ்பரீ





முதலிய அறிஞர்களைச் சந்தித்தார். அவர்கள் சூடானிலுள்ள மஹ்தீ என்னும் பெரியாரைப்பற்றிய அபிப்பிராயம் அறிய அவாவினர். எகிப்து அரசியல் நிபுணர் என்று கூறப்பட்ட மிஸ்டர். உல்பார்டுப்பிளண்டு எகிப்து அரசியல் பிரச்னையை சையத் ஜமாலுத்தீனுடன் கலந்தாலோசித்து ஒரு ஒழுங்கான முடிவுக்கு வரும்படி, சாலிஸ்பரிக்கு யோசனை கூறியிருந்தார்.

## ரஷ்யாவில்!

உர்வதுல் உஸ்கா நிறுத்தப்பட்டதற்காக ஜமாலுதீன் சளைத்துவிடவில்லை. பாரிசிலிருந்து ரஷ்யாவுக்குச் சென்றார். பீட்டர்ஸ்பர்க் (லெனின் கிராட்) கில் ரஷ்ய கவர்ன்மெண்டார் அவருக்கு பெரிய வரவேற்பளித்துக் கௌரவித்தனர். லெனின் கிராடில் நான்கு ஆண்டுகள் தங்கியிருந்தார்.

ரஷ்ய முஸ்லிம்களின் உரிமைகள், கவர்ன்மெண்டாரால் பாதிக்கப்பட்டிருந்தன. முக்கியமாக 'குர்ஆன்' முதலிய வேத நூற்கள் அச்சியற்றவுங்கூடாதென்று கடுமையான தடையுத்தரவு பிறப்பித்திருந்தார்கள். இதைக் கேள்வியுற்ற ஜமாலுத்தீன் மிகுந்த வருத்தமும், ஆத்திரமும் அடைந்தார். அவர் ஜார்மன்னனுடன் தொடர்ந்த கடுமையான கிளர்ச்சிகளாலும், தீவிர முயற்சிகளாலும், ரஷ்ய முஸ்லிம்களுக்குப் பூரண மத உரிமை அளிக்கப்பட்டது. இந்த நன்றியை, அந்தகால ரஷ்ய முஸ்லிம்கள் மட்டுமல்ல—அவர்கள் சந்ததிகள்கூட மறக்கமுடியாது. இது எல்லா முஸ்லிம்களுக்கும் மகிழ்ச்சியைத் தரத்தக்க ஒரு செய்கை.

## ஈரானில் பிரதமர்

மேனாட்டு உல்லாசச் சுற்றுப்பிரயாணத்துக்குச் சென்றிருந்த இரான் மன்னர் நாஸிருத்தீன் ரஷ்யாவில் ஜமாலுத்தீனைச் சந்தித்தார். இரானுக்குத் திரும்பும்படியும், தமக்குப் பிரதம மந்திரியாக இருத்தல் வேண்டுமென்றும் வேண்டிக்கொண்டார். இரானில் சுன்னி–ஷியா சர்ச்சைகள் இருப்பதாகக் கூறி, ஒரு நண்பர் ஜமாலுத்தீனைத் தடுத்தார். அந்த சர்ச்சைகளைத் தீர்த்துவைப்பதற்கு இதுவே நல்ல தருணமென்று, ஜமாலுத்தீன், மன்னரின்வேண்டுகோளுக்கிணங்கினார். ஷியா–சுன்னி தகராரை ஒழிப்பதில் மன்னரும் கலந்து கொள்வார் என்ற எண்ணத்தால், ஜமாலுத்தீன் இரானை வந்தடைந்தார். ஆனால் அந்த எண்ணம் பிறகு மாறிவிட்டது அரசரின் அபிப்பிராயத்தை ஜமாலுத்தீன் ஏற்றுக்கொள்வதற்கில்லை. மன்னருக்கும்,பிரதமருக்குமிடையே கருதற்கரிய கருத்து வேற்றுமை காணப்பட்டது. சையத் சாஹிப் சுதந்திரப்பிரியர்; அரசர் ஆளும் வெறிகொண்டவர். ஜமாலுத்தீன் மக்கள் உரிமைகளைக் காத்தே தீருவதென உறுதி உள்ளங்கொண்டவர்; அரசரோ, மக்களுக்கு எவ்வித உரிமையும் வழங்கக்கூடாது என்ற வைராக்கியம் பூண்டவர். ஒருவர் குடிஅரசு அன்பர்; மற்றொருவர் சர்வாதிகார மனப்பான்மை படைத்தவர்! இவ்விதமான பெரும் வேற்றுமைகளைக்கொண்ட இருவர் ஓரிடத்தில் எங்ஙனம் கூடியிருத்தல் கூடும்? இந்த வேற்றுமைகள் விரைவில் வெளிவர ஆரம்பித்தன. மீண்டும் மேனாடு செல்வதற்காக ஜமாலுத்தீன் மன்னரிடம் கோரிய உத்தரவு வெளிப்படையாக நிராகரிக்கப்பட்டது. மன்னர் இவரை அதிகாரத்திலிருந்து விலக்கவுமில்லை. அவர் சொற்படி நடப்பதுமில்லை. இந்த சங்கடமான நேரத்தில், என்ன செய்வதென அறியாமல் தவித்தார் சையத் சாஹிப். கடைசியாக தஹ்ரான் நகரத்துக்கண்மையிலுள்ள ஒரு பெரியாரின் அடக்க ஸ்தலத்தில்போய் தங்கிவிட்டார். அந்த இடத்தில் தஞ்சம் புகுந்தவர்களை எந்த அதிகாரமும் ஒன்றும் செய்யக்கூடாது என்பது அவ்வூரின் புராதன வழக்கம். அங்கே ஏழு மாதங்கள் தங்கி இருந்து தமக்கும் நாஸிருத்தீனுக்கும் உள்ள அபிப்பிராய பேதங்களை மக்களுக்குப் பகிரங்கமாக எடுத்துரைத்தார். தம்மிடம் வரும் எல்லா இனத்தவர்களையும் தமது ஆற்றலால் தம்பக்கம் திருப்பிவிட்டு, அவர்கள் உள்ளங்களில் உணர்ச்சி விதையைத் தூவிவிட்டார்.



## நாடுகடத்தப்பட்டார்

இவரை இன்னும் இங்கே வைத்திருந்தால், நாட்டில் புரட்சியை உண்டுபண்ணி விடுவார் என்ற அச்சத்தால், மன்னர் நாஸிருத்தீன், நாடுகடத்திவிட உத்தரவிட்டார்.

ஐந்நூறு குதிரை வீரர்கள், இரும்ல் நோயால் பீடிக்கப்பட்டுப் படுக்கையோடு கிடந்த ஜமாலுத்தீனைச் சிறைப்படுத்தி துருக்கி எல்லையில் கொண்டுபோய்விட்டு விட்டார்கள். "ஒன்றும் செய்யக்கூடாது" என்ற நியதியை மன்னன் மீறியதைக்கண்டு நாடு ஒரே பறபறப்பாக இருந்தது. இச்செய்தியை அறிந்த அறிஞர்கள் அனைவரும் மனங்கலங்கினார்கள். இதன் பலன்தான் 1896ல் மன்னர் நாஸிருத்தீன்

கொலையுண்டதற்குக் காரணமாயிருந்தது. மேற்சொன்ன அடக்கஸ்தலத்தின்மாண்பை மதியாது நியதியை மீறியதால் தான் மன்னர் கொலையுண்டார் என மக்கள் கருதினர்.

## மேனாட்டில் கடைசிச் சுற்றுப்பிரயாணம்

கடைசியாக சையத் ஜமாலுத்தீன் இராணைவிட்டு வெளியேறிவிட்டார். ஒன்றரையாண்டு மேனாட்டுச் சுற்றுப் பிரயாணஞ் செய்துவிட்டு, ஜமாலுத்தீன் லண்டன்மா நகரத்தில் வந்து தங்கினார். அங்கே அநேக பொதுக்கூட்டங்களில் கலந்துகொண்டு, மன்னர் நாஸிருத்தீனின் அடாத செயல்களைக் கண்டித்தார். முக்கியமான பத்திரிகைகளிலும் அடிக்கடி இதுபற்றி எழுதி, வன்மையாகக் கண்டித்து வந்தார்.

1892ல் மீண்டும் கான்ஸ்டாண்டிநோபிளுக்குச் சென்று மன்னனின் விருந்தாளியாக ஐந்து கடைசியாண்டுகள் தங்கியிருந்தார். சுல்தான் அப்துல் ஹமீத்கான் இவரிடம் அபார அன்பு கொண்டார்.

சுல்தான் அப்துல் ஹமீத்கானிடம் இரானிலிருந்து மூன்றுதடவை தூது வந்தது. சையத் சாஹிப் நாஸிருத்தீனைக் கண்டிப்பதை விட்டுவிட சிபார்சு செய்யும்படி அந்த தூது கேட்டுக்கொண்டது. மன்னர் இரண்டுமுறை அதை மறுத்துவிட்டார். மூன்றும்முறை, ஜமாலுத்தீனிடம் சொல்வதற்காக வாக்களித்தார். இதை சையத் சாஹிபிடமும்கூறி, தயைசெய்து கண்டிப்பதை விட்டுவிடும்படியும்





வேண்டிக்கொண்டார். சையத் சாஹிப் மன்னரின் விருப்பத்திற்கிணங்கினார். "மன்னித்து விடுகிறேன்" என்று பெருந்தன்மையோடு கூறியும் விட்டார். இரான் மன்னர் ஜமாலுத்தீனைக்கண்டு மிகவும் அஞ்சினர் என்பது பிறகு வெளிவந்தது.

## விசாரணை

1896 மே மாதம் நாஸிருத்தீன் கொலை விஷயமாக முதல் முதலாக மிர்ஜா முஹம்மத்ரி ஜாகிர்மானி என்பவரால் வெளியானவுடன் உலக அரசியல் வட்டாரங்களில் ஒரே குழப்பம் ஏற்பட்டுவிட்டது. இரான் சர்க்கார் முதலில் பஹாயிகளைச் சந்தேகித்தது. பிறகு சையத் ஜமாலுத்தீன், அவர் நண்பர்களான மிர்ஜா ஆகாகான், ஷேக் அஹ்மது கிர்மானி ஹாஜி மிர்ஜா ஹசன்கான், கபீருல் முல்க் மூர்த் ஆகிய நால்வர் மீதும் குற்றம் சுமத்தப்பட்டது. அந்த நால்வரையும் தம்மிடம் ஒப்படைக்குமாறு இரான் சர்க்கார் துருக்கி அரசாங்கத்தை வேண்டிக்கொண்டது. அநேக வாதப் பிரதிவாதங்களுக்குப் பிறகு ஜமாலுத்தீன் தவிர, மற்ற மூவரும் இரான் சர்க்காரிடம் ஒப்படைக்கப்பட்டனர். தப்ரேஜில் இம்மூவரும் ரகசியமாகக் கொலை செய்யப்பட்டனர். ஆனால் சையத் சாஹிபை அனுப்ப சுல்தான் அப்துல் ஹமீத்கான் மறுத்துவிட்டார். சையத் ஜமாலுத்தீன் இரான் பிரஜையல்ல என்பதே முக்கிய காரணம். ஆனாலும் சையத் ஜமாலுத்தீன் 1896 மே மாதம் கான்ஸ்டாண்டிநோபிளில் கைதுசெய்யப்பட்டு ஒரு விசேஷ விசாரணைக் கமிட்டியால்

விசாரிக்கப்பட்டார். அவர் குற்றவாளியல்ல என்று அந்த கமிட்டியார் கருதினதால் மீண்டும் விடுவிக்கப்பட்டார்.

## பிரிவு

1896 இறுதியில், சையத் சாஹிப் நோய்வாய்பட்டார். எவ்வளவு தீவிர முயற்சிகள் செய்தும் பலனளிக்கவில்லை. நோயிலிருந்து தெளியவே இல்லை. **1897-ம் ஆண்டு** மார்ச் **மாதம் 9-ந்தேதி**, உலக முஸ்லிம்களின் முன்னேற்றத்திற்காகவும், இஸ்லாமிய ஒற்றுமை ஏற்படுத்தவேண்டும் என்ற குறிகோளினாலும், அடிக்கடி நாடுகடத்தப்பட்டும், சிறைப்படுத்தப்பட்டும் நிம்மதையிழந்த அவரது ஆன்மா இவ்வையத்தினின்றும் நிரந்தர விடுதலை பெற்றுவிட்டது. (இன்னு லில்லாஹி) பிரம்மாண்டமான ஊர்வலத்திற்குப் பிறகு அவரது உடலை நிஷான்தாஷ் என்னும் இடத்தில் (உலகப் பிரசித்திபெற்ற அறிஞர்களின் அடக்கஸ்தலம்) நல்லடக்கம் செய்யப்பட்டது.

இஸ்லாமிய ஒற்றுமைக்காகவே தமது வாழ்நாளை அர்ப்பணித்து, கங்குற்பொழுதென நற்பணியாற்றிய அன்னாரின் ஆன்மா சாந்தியடைவதாகுக!



## சையத் சாஹிபைப்பற்றி மேனாட்டறிஞர்கள்

## ஜார்ஜ் ஜிடன்

"மஷா ஹிருஷ்ஷிர்க்" ஆசிரியர் ஜார்ஜ் ஜிடன், சையத் சாஹிபின் தோற்றத்தைப்பற்றியும், அவரது குணங்களைப் பற்றியும் கூறுகிறார்:

ஜமாலுத்தீன், பொதுவாக, ஹிஜாஜ் அரபிகளைப் போன்றிருப்பார். உறுதிவாய்ந்த தேக அமைப்பு; கன்னங் கருத்த - மினுமினுப்பான கண்கள்; தூரப்பார்வை சிறிது குறைவு, ஆனாலும் கண்ணாடி உபயோகிப்பதில்லை; படிக்கும் போது, புத்தகத்தை கண்களுக்குச் சமீபத்தில் பிடித்துக் கொள்வார். நீண்ட மயிர்; சாதாரணமாக, கான்ஸ்டாண்டிநோபிள் உலமாக்களைப்போன்று உடை அணிவார்; குறைந்த ஆகாரமே உட்கொள்வார்; பகலில், பெரும்பாலும் ஒரு வேளைக்குமேல் சாப்பிடுவதில்லை; ஆனால், இரானியர்களைப்போல், நாள் முழுதும் தேனீர் அருந்துவார்; புகையிலையும் அதிகமாக உபயோகிப்பார்; தனக்குத் தேவையான புகையிலையைத் தானே வாங்கிக்கொள்வார்; சில கீழ்நாட்டுச் சிகரெட்டுகளையும் பிடிப்பது வழக்கம், ஆனாலும் சுருட்டுக்களையே பெரிதும் பாராட்டுவார்.

தமது வாழ்நாளின் இறுதியில், அவர் கான்ஸ்டாண்டிநோபிளில் தங்கியிருந்தபோது, துருக்கி மன்னரால் மாதமாதம் 75 பவுண்ட் உபகாரமாகக் கிடைத்தது. நிஷான்தாஷில், ஒரு அழகிய மாளிகை, அவருக்கு உல்லாச வாழ்க்

கைக்காக, மன்னரால் நியமிக்கப்பட்டிருந்தது. போக்கு வரவுக்காக, வண்டியும் குதிரைகளும் மன்னராலேயே அனுப்பப்பட்டன; அவர், பகல் முழுதும் வீட்டிலேயே இருப்பார்; மாலை வேளைகளில் வண்டியில் ஏறி, காற்றோட்டமாகச் செல்வார்; மிகக் குறைவாகவே துயில்கொள்வார்; அவரைச் சந்திக்க வருபவர்கள், எளியவர்களோ, அல்லது அதிக உயர்ந்தவர்களோ, யாராயிருந்தாலும், அனைவர்களிடமும் அன்பாகயும், அழகாகவும் பழகுவார். ஆனால் அவர், பிறரைச் சந்திப்பதற்கு, செல்வந்தர்களின் வீடுகளுக்குப்போவது மிகவும் குறைவு.

அவரது சொற்பொழிவுகள், மிக உயர்ந்தவையாகவும், உள்ளத்தைக் கவரும் தன்மையுடையவையாகவும், இனிமையாகவும் இருந்தன. அவர் எப்பொழுதும், உயர்ந்த அழகிய சொற்களையே உபயோகிப்பார். சொற்பொழிவுத்துறையில் ஒரு தனி சமர்த்துகொண்டவர்......உலக ஆசாபாசங்களில் அவருக்கு எப்பொழுதும் விருப்பம் கிடையாது. ஆபத்தான நேரங்களிலும் கலங்கா உள்ளம்படைத்தவர். நேர்மையும் இனிய பேச்சுக்களுமேதான் அவரது அணியாயிருந்தன. நண்பர்களைச் சந்திக்கும்போது, மரியாதையுடன், மிகவும் தாழ்ந்து வணங்கிப்பேசுவார்; ஆனால், பெரிய மனிதர்களிடம், எப்பொழுதும் சுதந்திரமாகவும், நிராசியாகவுமே இருப்பார்.

ஒரு சமயம், அவர் எகிப்திலிருந்து வெளியேறியபோது, வெறுங்கையுடன் சுவீஸுக்கு வந்துசேர்ந்தார். அங்கிருந்த



2354

இரான் கவுன்சில், சில இரான் வியாபாரிகளுடன் அவரிடஞ்சென்று, அவருக்குப் பண உதவி செய்ய நினைத்தார்; ஒரு தொகையை அவரிடம் நீட்டி "இதை எங்கள் சன்மானமாகவோ, அல்லது கடனாகவோ ஏற்றுக்கொள்ளுங்கள்" என்றுவேண்டிக்கொண்டார். ஆனால் சையத் சாஹிப், "இது என்னினும் உமக்கு அதிகந் தேவைப்படுமாதலால் தயைசெய்து நீங்களே வைத்துக்கொள்ளுங்கள்" என்று கூறி மறுத்துவிட்டார்.

அவரது அறிவு தீக்ஷண்யம், மிகவும் அபூர்வமாக இருந்தது. தன்னுடன் பேசுபவர், விஷயத்தை முழுதும் சொல்லி முடிக்குமுன், தாமே அதற்கான விடையைக் கூறிவிடுவார். அவருடைய சொற்களில், மந்திரசக்திபோன்ற காந்தசக்தி இருந்தது; அவர் வாயிலிருந்து வெளிவரும் ஒவ்வொரு வார்த்தையும், அதைக் கேட்பவர்கள் உள்ளத்தில் அப்படியே பதிந்துவிடும்; அவருக்கு உலக அறிவு அதிகம். விஞ்ஞானத்தின் உண்மைகளிலும், இஸ்லாத்தின் கலை, நாகரிகம், சரித்திரம் இவைகளிலும் தேர்ச்சி அடைந்திருந்தார். அரபி, பார்ஸி, துருக்கி, புஷ்து முதலிய மொழிகள், அவரது தாய் மொழியைப்போலவே ஆகிவிட்டன; ஆங்கிலம், ரஷ்ய- பிரெஞ்சு மொழிகளும் கற்றிருந்தார். பிரெஞ்சு மொழியை, மூன்றே மாதங்களில், ஆசிரியரின் உதவி இல்லாமலேயே, படிக்கவும் எழுதவும் கற்றுக்கொண்டார். எப்பொழுதும் கையில் புத்தகத்துடனேயே காணப்படுவார்; முக்கியமாக, அரபி, பார்ஸி நூல்களே அவருக்கு மிகவும் பிரியமானவை. தமது வாழ்நாள் முழுதும் கலியாணமின்றி பிரம்மச்சாரியாகவே காலங்கழித்துவிட்டார்.

ஜார்ஜ் ஜீடன், சையத் சாஹிபின் அரசியல் போக்கைப்பற்றிக் கூறுகிறார்: ஒரு இஸ்லாமிய ஆட்சி, அது, உலக முஸ்லிம்களையெல்லாம் ஒன்றுசேர்க்கும் அரசியல் ஆட்சி ரூபத்தில் உருவாகவேண்டும்; உலக முஸ்லிம்கள் அனைவரும் ஒரே கலீபாவுக்குக் கீழ்படியவேண்டும்; என்பது அவரது குறிக்கோள்; இதற்காகவே முஸ்லிம்களைத் தூண்டிவிட்டார்; இந்த முயற்சியிலேயே அவர் தமது சொந்த தேவைகளையும் மறந்தார்: உலகத்தை வெறுத்தார்; மணஞ் செய்துகொள்ளவில்லை; தனக்கென ஒரு தொழிலையும் மேற்கொள்ளவில்லை. இந்த முயற்சியில் அவர் வெற்றி கண்டாரில்லைதான். துரதிர்ஷ்டவசமாக, அவர் நினைவாக முலாஹிதாக்களுக்கு மறுப்பாக எழுதிய ஒரு நூலும், அடிக்கடி பத்திரிகைகளில் எழுதிவந்தவைகளில் சில கட்டுரைகளுமே தான் நம்மிடம் இருக்கின்றன. ஆனாலும், தமது நண்பர்கள் உள்ளங்களில், சிந்தனையின் ஒரு புதிய கிளர்ச்சியை உண்டுபண்ணிவிட்டார் என்பதில் ஐயமில்லை; அவர்கள் (மாணவர்கள்) தம்து எழுதுகோல்வாயிலாகத் தமது அறிவைப் பயன்படுத்துகிறார்கள். அதில், கீழ்நாடு சிறிது பயனடைந்திருக்கிறது—இன்னும் அடையும்.

அவருக்கிருந்த நாவன்மையை, ஒரு நிகழ்ச்சியால் நன்கறியலாம்: சையத் சாஹிப் சுன்னி மஜ்ஹபையைச் சேர்ந்தவர்; இரானோ, ஷியாக்களின்கோட்டை. அப்படியிருந்தும் தாம் அந்த வேற்றுமைகளில் சிக்கிக்கொள்ளவில்லை. இதுமட்டுமல்லாமல், எல்லா இரானியர்களையும் தமது பக்தர்களாகவும், மாணவர்களாகவும் மாற்றிவிட்டார். அவர்களிடம் பழகிய சில நாட்களுக்குள், உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற வேற்றுமை அடியோடொழிந்தது; எல்லாம் சரிநிகர் என்ற சமத்துவ உணர்ச்சியை . உண்டுபண்ணிவிட்டார். பொதுவாக இஸ்லாமிய சேவைக்காக ஒரு ஆவேசத் தீயை மூட்டிவிட்டார்.



ஒரு சமயம், மன்னர் நாஸிருத்தீன், ஒரு ஆங்கிலக் கம்பெனிக்கு, புகையிலை குத்தகைக்குவிட்டிருந்தார்; இதைக் கண்டிக்க, ஜமாலுத்தீன், அங்குள்ள மதகுரு ஹாஜி மிர்ஜா ஹசனுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதியிருந்தார். அந்தக் கடிதத்தைக்கண்ட மதகுரு, உணர்ச்சி மேலீட்டால், "மன்னர், குத்தகை ரத்து செய்யும்வரை, யாரும் புகையிலை உபயோகிக்கக்கூடாது. அப்படி உபயோகித்தால், அது ஹராமாக இருக்கும்" என்று ஒரு பத்வா (பொது உத்தரவு) பிறப்பித்துவிட்டார். அல்மனார் ஆசிரியர் எழுதுகிறார்: "அந்த கடிதம் இரான் பூராவுக்கும் ஒரு சமூக உணர்ச்சியைக் கிளப்பிவிட்டது; அவர்கள் உபயோகிக்கும் நாட்டுப் பொருளையே நிராகரிக்கும் அவ்வளவு வேகத்தில் உணர்ச்சியைத் தூண்டிவிட்டது. இரான் நாட்டு உலமாக்கள் அனைவரும் அந்த பத்வாவை மின்னல் வேகத்தில் நாடு முழுமைக்கும் பரத்திவிட்டனர். பொது மக்களும், மந்திரத்தால் கட்டுண்டவர்கள்போல் ஒரு முகமாக நிராகரித்தனர்." என்று. தஹ்ரானில் இந்த பத்வா வெளியான மறுநாள், அரசர் குடாக்கு கேட்டனுப்பினர்; அரண்மனையில் ஒரு துண்டு புகையிலையும் கிடையாது என்ற பதில்தான் கிடைத்தது. மாளிகையிலிருந்த புகையிலையை, முன்னமேயே தீக்கிரை

யாக்கப்பட்டுவிட்டது. திகைத்தார் அரசர்; மெல்ல விஷயத்தை விசாரித்தார்; மதகுருவித்த பத்வாவின் விளைவு என்று அறிந்துகொண்டார். குத்தகை ரத்துசெய்ததைத் தவிர, வேறு வழியில்லை மன்னருக்கு! அந்த ஆங்கிலக் கம்பெனிக்கு 15 லக்ஷம் பவுன்ட் நஷ்ட ஈடு கொடுக்கநேரிட்டது.

## பேராசிரியர் ப்ரௌன்

பேராசிரியர் ப்ரௌன் எழுதுகிறார்:—

"பெரிய மனிதர்களால், பெரிய நிகழ்ச்சிகள் நிகழ்கின்றனவா? அல்லது பெரிய நிகழ்ச்சிகள் பெரிய மனிதர்களை உண்டுபண்ணுகின்றனவா?" என்ற பிரச்னை இன்னுமிருக்கின்றது. எனினும், ஒரு குறிக்கோளும், அதனை ஆற்றி முடிக்க ஒரு கர்மவீரனும் ஆக இரண்டும் இருந்தே தீர வேண்டுமென்பதில் கிஞ்சிற்றும் ஐயமில்லை! இரானிலும் துருக்கியிலும் காணப்படும் விடுதலை வேட்கையையும், எல்லாத் துறைகளிலும் முன்னேறவேண்டுமென்ற துடிப்பும், அதனல் ஏற்பட்ட புரட்சியையும் இதர இஸ்லாமிய நாடுகளிலும் பரத்த, மிக உன்னதமுறையில், ஆழ்ந்த சிந்தனையுடன், தைரியமாக, குறிக்கோள் கை கூடும்வரை சிறிதும் மனந்தளராது உறுதியோடு, சிறந்த நாவன்மையாலும், ஆணித்தரமான எழுத்துவன்மையாலும் காரியத்திலிறங்கி, ஆண்மையுடன், முஸ்லிம் உலகுக்கு சையத் முஹம்மத் ஜமாலுத்தீன் தொண்டுசெய்த அளவு வேறு எந்த கர்மவீரனும் செய்ததில்லை. அவர் காலத்தில், உலகப் பிரசித்தியடைந்திருந்த அறிஞர்கள், எழுத்தாளர்கள், தத்துவ சாஸ்



திரிகள்—அவ்ரிடம் நெருங்கிப் பழகிய அனைவரும், அவரை ஒரு தேசாபிமானியெனப் பாராட்டினர். அவரை எதிர்த்தவர்களோ, ஒரு "பயங்கர இயக்கவாதி" என்று ஓலமிட்டனர். சையத் சாஹிப், முஸ்லிம் நாடுகளிலும், இதர ஐரோப்பிய நாடுகளிலும் அடிக்கடி சுற்றுப்பிரயாணம் செய்து, அங்கிருந்த கீழ்நாட்டு-மேல்நாட்டு அறிஞர்களிடம், தமது குறிக்கோளைப்பற்றி விவாதித்து, அதன் பயனைப் பலரை நண்பர்களாகவும், சிலரை விரோதிகளாகவும் கொண்டார்...

இஸ்லாமிய உலகத்தின் இந்த புத்துணர்ச்சிக்கு 20 ஆண்டு வரை, இந்த ஆச்சரிய மனிதர் ஜமாலுத்தீன் தொண்டு செய்ததுபோல் வேறெந்த அறிஞனும் செய்யமுடியாது. அவரது வாழ்க்கையை வரையப்புகுமுன் கீழ்நாடுகளின் சமீபகால மாறுதல்களையும் எட்டிப்பார்க்கத்தான் வேண்டும்; ஏனெனில், ஆப்கானிஸ்தான், இந்தியா மட்டுமல்லாது, துருக்கி, இரான், எகிப்து முதலிய நாடுகளின் புரட்சிகளையும் குறிக்கத்தான்வேண்டும்; சையத் சாஹிப் மூட்டிய புரட்சிதான், வெவ்வேறு உருவத்துடன், ஆங்காங்கே இன்னும் உயிரோடிருக்கின்றது.

இறைவன், ஜமாலுத்தீனுக்கு, ஏதோ ஒரு அதிசய சக்தியையும் அறிவையும் படைத்துவிட்டான். ஆயுள் முழுதும் புரட்சியிலேயே கழித்த லக்ஷிய வீரரவர்; கைம்மாறு கருதாதவர். நிகரற்ற எழுத்தாளர்; நெருப்பைக்கக்கும் சொற்பொழிவாளர். ஆற்றலிலும் அனுபவத்திலும் பெரிய கடல்; சிந்தனைச்சிற்பி. அவரிடம் ராணுவ பலமில்லையெனினும், அரசர்களும் அவரைக்கண்டு அஞ்சிக்கொண்டிருந்தார்கள். தமதுசக்திகளையெல்லாம் செயலில் காட்டினர். ஐரோப்பிய ஆசிய நாடுகளிலுள்ள அரசியல்வாதிகளுக்குவிளங்காமலிருந்ததைத், தான் அறிந்துகொண்டார். மாபெரிய அரசியல் நிபுணர்களெல்லாம், முஸ்லீம்களுக்கு இழைத்த மகத்தான

தீங்குகளையெல்லாம் மண்ணில் மறையச்செய்தார். எகிப்து தேசிய இயக்க வாதிகளின் புரட்சி தோல்வியுற்றது உண்மையெனினும், புரட்சி அவரது சிருஷ்டிதான் என்பதை யாரும் மறுக்கமுடியாது. இன்னும் எகிப்தில், புரட்சித் தீயின் சில துண்டுகள், சாம்பலில் மறைந்து கிடக்கின்றன.

இரானின் புரட்சிக்கும், உணர்ச்சிக்கும், உத்வேகத்துக்கும் காரணகர்த்தா இவரே. இஸ்லாமிய அரசாங்கங்களின் பூரண ஆயுளுக்குத் தலைக்குமேல் தொங்கிக்கிடக்கும் பேராபத்தை முன்கூட்டியே தீர்க்கதரிசனம் கூறினர். ஐரோப்பிய வல்லரசுகள் இவர்களுக்குத் தொடர்ந்து புரிந்து வரும் அந்தரங்க சூழ்ச்சிகளையும், ஆக்கிரமிப்புத் தோரணைகளையும் எடுத்துக்காட்டி, இஸ்லாமிய நாடுகள் ஒற்றுமையோடு இருக்கவேண்டிய அவசியத்தையும் எடுத்துக்காட்டி எச்சரித்தார். துருக்கி, இரான், மொராக்கோ முதலிய இஸ்லாமிய நாடுகள், இதுவரையும், எந்த மேனுட்டுச் சூழ்ச்சிகளிலும் சிக்காமல் தப்பி இருக்கின்றன எனினும், ஐரோப்பிய நாடுகள், கூட்டாகவோ, தனித்தனியாகவோ, இவர்களுக்குச் செய்யக் காத்திருக்கும் சதிகளும் அப்படியேதான் இருக்கின்றன. இந்த சூழ்நிலைகள், இஸ்லாமிய உலக ஒற்றுமையை வற்புருத்தவில்லையா? ஒற்றுமை மிக மிக அவசியம் என்று யாருக்குத்தான் தோன்ருது? இதைத்தான் **பான் இஸ்லாமிஸம்** என்று கூறுகிருர்கள்.

உண்மையிலேயே பான் இஸ்லாமிஸத்தின் தந்தை ஜமாலுத்தீனே தான். யாராவது ஒரு முஸ்லிம்மன்னன், ஜமாலுத்தீன் வகுத்த இந்த திட்டத்தை மனதில் வைத்துக்கொண்டு செயலாற்றியிருந்தால், ஜமாலுத்தீன், தமது உயர்ந்த லக்ஷியத்தைத் தம் வாழ்நாளிலேயே சாதித்தே இருப்பார். அதன் பயனை இஸ்லாமிய உலகம் அடைந்தே இருக்கும்.



